# செ ன்னிமலைத் திருத்தலம்

ஆசிரியர் :

தமிழகக் கோயிற் கலைச்செல்வர்

தி. இராசமாணிக்கம் பிஏ , பிகாம்., விசாரத்

விற்பனை உரிமை :

திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்.,

154, டி. டி. கே. சாலை, சென்னை-18.

This book is

Published with the financial

Assistance of

Thirumala Tirupati

Devasthanams

Under their scheme

"Aid to publish religious books"

# முன்னுரை

குமரன் எழுந்தருளியுள்ள குன்றுகள் (திருப்பரங்குன்றம், பழமுதிர்சோலை நீங்கலாக) ஆறுமுகனின் ஆறுபடைவீடு களில் ஒன்றான குன்று தோறாடல் என்ற பொதுப் பெயரால் அழைக்கப்படுகின்றன. அவற்றில் ஒன்று பெரியார் மாவட்டத்தைச் சார்ந்த சென்னிமலை. அருணகிரிப் பெருமா னின் திருப்புகழ் பாடல்களைப் பெற்ற இந்தத்தலம் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற முச்சிறப்புகளுடன் விளங்குகின்றது. மேலும் 'ஸ்ரீதத்வநிதி' என்ற நூலில் விதிக்கப்பட்ட முருகனது அரிய வடிவங்களை உடையதாக இருக்கின்றது. கொங்கு நாட்டில் உள்ள புகழ் மிக்க முருகனது திருத்தலங்களில் ஒன்று.

இந்த நூலை வெளியிட நிதி உதவி அளித்துள்ள திருப் பதி திருமலை திருக்கோயிலுக்கும், இந்தக் கோயிலில் உள்ள அரிய வடிவங்களைப் புகைப் படம் எடுக்க அனுமதி அளித்த இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை ஆணையருக்கும். திருக்கோயிலை நல்ல முறையில் சுற்றிக் காண்பித்து. வேண் டிய தகவல்களை விரிவாக எடுத்துக் கூறிய சிவாசாரியர்கள் குறிப்பாக திருவாளர்கள் ஆரூரன் குருக்கள், பாலுகுருக்கள் ஆகியோருக்கும் எனது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இந்த நூலை நல்ல முறையில் அச்சிட்டு வெளியிடுவதன் மூலம் தம் பேராதரவினைத் தொடர்ந்து அளித்துவரும் கழக ஆட்சியாளர் திருமிகு. இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப். அவர்களுக்கும் எனது உளங்கனிந்த நன்றியை உரித்தாக்கிக் கொள்கின்றேன்.

''என் கடன் பணி செய்து கிடப்பதே''

தி. இராசமாணிக்கம்

# உள்ளுறை

| | | பக்கம் |
|---|---|---|
| 1. | முன்னுரை | IV |
| 2. | நாட்டுச் சிறப்பு | 3 |
| 3. | புராணப் பெருமை | 5 |
| | அ. தலச் சிறப்பு | |
| | ஆ. தீர்த்தச் சிறப்பு | |
| | இ. மூர்த்தியின் மாண்பு | |
| 4. | படிகளால் அமைந்த வழி | 14 |
| 5 | திருக்கோயில் அமைப்பு | 15 |
| 6. | சமயச் சிறப்பு | 23 |
| 7. | நவகண்ட சிற்பம் | 24 |
| 8. | கலைச் செல்வம் | 25 |
| 9. | இலக்கியச் சிறப்பு | 32 |
| 10. | கல்வெட்டுகள் | 34 |
| 11. | வரலாற்றுச் சிறப்பு | 35 |
| 12. | தொழில் மேன்மை | 35 |
| 13. | திருப்பணிகள் | 36 |
| 14. | பூசை நடைமுறைகள் முதலியன | 35 |
| 15. | பிற | 37 |
| 16. | நிர்வாகம் | 38 |
| | பிற்சேர்க்கை-1 | 39 |
| | பிற்சேர்க்கை 2 | 42 |



சென்னிமலைத் திருத்தலம் உற்சவர்



நவகண்ட சிற்பம்



அன்னையார் திருக்கோயில்



சிவாச்சாரியார்களுடன் ஆசிரியரும் அவர்தம்
மனைவியாரும், மைத்துனரும்

# சென்னிமலைத் திருத்தலம்

## முன்னுரை

"செஞ்சொற் தலவர்கள் சங்கத் தமிழ் தெரி
செந்திற்பதி நகர் உறைவோனே" (95)

என்ற அருணகிரிநாதர் திருவாக்கின்படி, செங்கோட்டு வெற்பன் செஞ்சொற் புலவர்களின் சங்கத்தமிழ் பெற்றவன். அன்று முதல் ஆறுமுகச் செவ்வேள் தமிழர் தம் தனிப்பெருங் கடவுளாகப் போற்றி வணங்கப்படுகிறான். அவன் தலைகள் 6 உடையவன் என்பதற்கேற்ப, அவன் உறையும் திருத்தலங் களும் ஆறு எனப்பட்டது போலும். அவன் வானவர் னைத்தலைவன் என்ற காரணத்தால், அவை படைவீடு னப் பரவப்பட்டன என்று கொள்ளலாம். அவை திருப் பரங்குன்றம், திருச்செந்தூர், திருஆவினன்குடி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை என்பனவாம். நக்கீர னார் தமது திருமுருகாற்றுப்படையில்,

"குன்று தொறாடலும் நின்றதன் பண்பே" (வரி 217)

எனக் குன்றுதோறும் குமரன் உறைகின்றான என்பர்.

"சேயோன் மேய மைவரை உலகமும்"

என்றபடி, குறிஞ்சிக் கடவுளான செவ்வேள் விரும்பி உறையும் குன்றுகளில் ஒன்று சென்னிமலை. சென்னிமலை என்றால் தலைமையான மலை என்பது பொருள்.

"சீர் பரவிய பூஞ்சோலைச் சென்னியங்கிரி"

பெரியார் மாவட்டத்தில் ஈரோட்டினின்றும் தாராபுரம் செல்லும் சாலையில் சுமார் 30 கிலோத் தொலைவில் உள்ளது. கோயமுத்தூர் - ஈரோடு இருப்புப் பாதையில் ஈங்கூர் புகைவண்டி நிலையத்தினின்றும் சுமார் 6 கிலோத் தொலைவில் "தடம் பொழிற்பைம் போதார் சிகரகிரி" உள்ளது. இதன் இயற்கை வளத்தை,

"குயிலாய முழவு விம்மக் கோங்கலர் வானரங்
தாளங் கொட்டப்பைந்தேன்
அயிலாய மிஞ்று பாணிசை மிழவுறப் பொதும்பர்
தலையசைப்பத் தோகை
மயிலாய நடம் புரியுஞ் சிரகல" (5)

என்று தலபுராணம் கூறுகிறது. தேனை உண்கின்ற தேனீக்கள் இசைபாட, குயில்கள் முழவு என்னும் வாத்தியத்தை ஒலிக்க, குரங்குகள் சோங்கை மலர்களைப் பறித்துத் தாளம் கொட்ட, சோலைகள் தலைகளை அசைக்கின்றனவாம்.

சென்னிமலை என்ற மலையின் பெயரால் அதன் அடிவாரத்தில் உள்ள ஊரும் வழங்கப்படுகிறது. மலையின் சுற்று சுமார் 16 கிலோ எனப்படுகிறது. அதன் பரப்பு 1700 ஏக்கர்கள். மலையின் உச்சி கடல் மட்டத்தினின்றும் 1749 அடி உயரம், அடிவாரத்தினின்றும் மலைமேல் உள்ள கோயிலுக்குச் செல்லும் படிக்கட்டுக்களால் அமைந்த வழி செங்குத்தாக இல்லை. 1320 படிகள் கொண்ட இது யாவரும் எளிதில் ஏறிச் செல்லுமாறு உள்ளது. இதைத் தவிர அடிவாரத்தினின்றும் மலைஉச்சி வரையில் செல்ல

சாலையும் உள்ளது. திருக்கோயிலால் பேருந்து வசதி செய்யப்பட்டுள்ளது.

## 2. நாட்டுச் சிறப்பு

"பூமலர் பொதுளும் புட்பகிரி" எனப்படும் சென்னி மலை கொங்கு நாட்டில் உள்ள பல குன்றுகளில் ஒன்று. கோவை, பெரியார் மாவட்டங்கள், சேலம் மாவட்டத்தில் ஓமலூர், சேலம், திருச்செங்கோடு, நாமக்கல் வட்டங்கள், திருச்சி மாவட்டத்தில் கரூர் வட்டம், குளித்தலை வட்டத்தில் ஒரு பகுதி, அண்ணா மாவட்டத்தில் திண்டுக்கல், பழனி வட்டங்களில் பகுதி கொண்டது கொங்கு நாடு.

சைவர்களுக்குக் கோயில் என்றாலே சிதம்பரமாம். இங்கு எல்லையில்லாப் பெருங்கூத்து இயற்றும் எம்பெருமானின் நடன சபையைப் பொன்னம்பலமாக்கத் தேவையான தங்கம் அனைத்தையும் கொடுத்து கொங்குநாடு. இதனை

"பற்று அறுத்து ஆளும் பரமன் ஆனந்தம்
பயில் நடனஞ் செய்
சிற்றம்பலத்தைப் பொன்னம்பலமாகச் செயச்
செலும் பொன்
முற்றிலுந் தன்னகத்தே விளைவாவதை மொய்ப்
பிறையுள்
மற்றும் புகழக் கொடுத்ததன்றோ கொங்கு
மண்டலமே"

எனக் கொங்கு மண்டல சதகம் போற்றுகிறது. நம்பி யாண்டார் நம்பிகள் தமது திருத்தொண்டர் திருவந்தாதியில்,

"சிங்கத்து உருவனைச் செற்றவன் சிற்றம்பல
முகடு
கொல்கிற் கனகம் அணிந்த ஆதித்தன்" (65)

என்றும், சேக்கிழார் பெருமான் தமது திருத்தொண்டர் புராணத்தில்,

"மன்னிய பொன்னம்பலத்து மணி முகட்டிற்
பர்கவொங்கிற்
பன்று துலைப் பசும் பொன்னாற் பயில்
பிழம்பர் மிசையணிந்த
பொன்னெடுந்தோள் ஆதித்தன்" (4111)

என்றும் குறிப்பிட்டுள்ளனர். கொங்கு நாட்டின் சிறப்பைப் பறைசாற்ற இது ஒன்றே போதும்.

சங்க நூல்களான புறநானூறு, அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை ஆகியவற்றில் கொங்குநாடு பேசப்படுகிறது. இந்த நாட்டைச் சார்ந்த சங்கப் புலவர்கள் பொன்முடியார், கருவூர் பூதஞ்சாத்தனார் ஆகியோராம். நன்னூல் ஆசிரியர் பவணந்தி முனிவரும், உரையாசிரியர் அடியார்க்கு நல்லாரும் இந்த நாட்டைச் சார்ந்தவர்களே. மேலும் கடையேழு வள்ளல்களில் வல்வில் ஓரியும், ஔவைக்கு நெல்லிக்கனி அளித்த அதியமானும், மயிலுக்குப் போர்வை கொடுத்த பேகனும் மற்றும் தமிழுக்குத் தலைகொடுத்த குமணனும் ஆண்ட நாடு இது. போகர், பாம்பாட்டி சித்தர், புண்நாக்கு சித்தர் போன்ற சித்தர்கள் வாழ்ந்த நாடு இது.

"பன்னருஞ் சதுர் மறைகளும் வேத
பராகரும்
கொல் நெடுஞ்சிலை மன்னருங் குலவி
வாழ் கொங்கில்" (17)

என்பது தலபுராணம். சொல்லுதற்கரிய வேதங்களும், அதைப் பயில்கின்ற அந்தணர்களும், பகைவர்களுக்கு அச்சத்தை அளிக்கும் நீண்ட வில்லை ஏந்திய மன்னர்களும் வாழும் கொங்கு நாடு என்பதாம்.

சங்க மன்னர்கள் ஆண்டமையால், இந்த நாடு கொங்கு நாடு எனப் பெயர்பெற்றது என்பர். "கொங்கு" என்ற சொல்லுக்கு பூந்தாது, மணம், தேன், கள் எனப் பல பொருள்கள் உண்டு. இந்த நாட்டைச் சார்ந்த கொல்லி மலை போன்ற பகுதிகளில் தேன் அதிக அளவில் கிடைப்ப தால், இப்பெயர் பெற்று இருக்கலாம் என்றும் ஒரு கருத்து நிலவுகிறது. சமயத் துறையிலும், வரலாற்றிலும் புகழ் மிக்க கொங்குநாடு தன் பெயருக்கு ஏற்பப் புகழ் மணம் வீசி ஒளிவிட்டுத் திகழ்கிறது.

## 3. புராணப் பெருமை

### (அ) தலச்சிறப்பு

ஒரு காலத்தில் ஆதிசேடனுக்கும் வாயுவிற்கும் யார் வலிமிக்கவன் என்ற போட்டி ஏற்பட்டது. இதை முடிவு கட்ட, ஆதிசேடன் வடதிசையில் உள்ள மேரு மலையைத் தனது திரண்ட ஆயிரம் படங்களால் உலகத்தார் அஞ்சுமாறு மறைத்தான். காற்றுக் கடவுள் அந்த மலையை வேரோடு கெல்லி எறிய மோதினான். ஆதிசேடன் மனம் கலங்காது இருந்தான். எனவேதான் வெற்றி அடையவேண்டி, வாயு உலகு உயிர்களின் மூச்சுகளைத் தன்னுள் அடக்கினான். அதனால் உயிர்கள் வாட்டமுற்றன. இதைக் கண்ட இந்திரன் ஆகியோர் கண்ணுதற் கடவுளாம் சிவபெருமானை அணுகினர். இறைவனை

> "மண்ணோடு நீர் அனல் காலோடு ஆகாயம் மதி இரவி
> எண்ணில் வரு இயமானன்" (திருவெண்காடு-3)

என்று ஞானக் குழந்தையாம் சம்பந்தப் பெருமான் அருளி யுள்ளார். இறைவனின் மேலே குறிப்பிட்ட எட்டு வடிவங் களில் காற்று ஒன்று. எனவே இறைவன் ஆதிசேடனைப் போரில் அடங்கிப் போமாறு அறிவுறுத்தினான். அதற்

கிணங்க, ஆதிசேடன் ஒடுங்கியபோது, காற்றுக் கடவுள் வலிமையுடன் மோதினான். அதனால் மேருவின் சிகரங்கள் சிதைந்தன. அவற்றில் சில "மாதவஞ் செய்த தென் திசையில்" வீழ்ந்தன. அவற்றில் ஒன்றுதான் சென்னிமலை எனப்படுவது.

"கொங்கிடைப் பொன்னி யாற்றின்
தென்திசைக் குளிர்தரங்கம்
பொங்கி எம்மருங்கும் சூழ் ஆன்
பொருனையின் வடபால் நாப்பண்
தங்கி யோர் முடியமர்ந்து தங்கியது
அதற்கு நாமம்
திங்கள் வந்து உலவுந் தெய்வச்
சென்னியங்கிரி என்று ஓதும் (19)

என்பது தலபுராணம். காவிரிக்கும் ஆன்பொருனை என்ற ஆம்பிராவதிக்கும் இடையில் ஒரு சிகரம் வீழ்ந்தது. அது சென்னிமலை எனப் பெயர்பெற்றது. இந்தச் செய்தியை,

"திண்முடிச் சேடனும் வாயுவுந் தர்க்கித்துச்
செம்பொன்னொளிர்
அணிமக மேருவைச் சுற்றுகையால் அம்
மலையின் உச்சி
நணுகிய காலில் அடிபட்டுப் பூந்துறை
நாட்டில் விழ
மணிமுடிச் சென்னிமலை யானதுங் கொங்கு
மண்டலமே"

என்று கொங்கு மண்டல சதகம் கூறுகிறது.

இந்திரன் தன் அவையில் நடனமாடும் இரு மகளிரிடம் தன் மனத்தைப் பறி கொடுத்தான். அவர்களும் அவன் மீது காதல் கொண்டனர். அவர்களது விருப்பம் ஈடேற,

அவன் அவர்களை ஈரோட்டில் பிறக்குமாறு ஆணையிட்டான். அதன்படி, அவர்கள் இருவரும் கணிகையர் குலத்தில் பிறந்தனர். சிறுநல்லார், பெருநல்லார் எனப் பெயரீ இடப்பட்டனர். தங்கள் குலத்திற்கேற்ப பாடலும் ஆடலும் கற்று அழகுமிக்கு விளங்கினர். இளங்கோவடிகள் தமது சிலப்பதிகாரத்தில் மாதவியைக் குறிப்பிடும்போது,

''ஆடலும் பாடலும் அழகும் என்றிக்
கூறிய மூன்றில் ஒன்று குறைபடாமல்''
(3-வரிகள் 8-9)

என நாடக மகளிர்க்குச் சிறப்பாக அமைய வேண்டிய மூன்று நலன்களை வெகு அழகாக எடுத்துக் கூறுகிறார். சிறு நல்லாரும், பெருநல்லாரும் இம்மூன்று நலன்களையும் உடையவர் என்பது

''காந்திரு மங்கையர் கவின் கொடு வளர்ந்தார்''
(13)

என்றும்

''பன்னும் இசையால் முனிவர் பண்பினை
முடிப்பார்'' (17)

என்றும்

''அவையகத்தின் நலமும் நயப்ப நடிக்கும்'' (25)

எனறும் தலபுராணம் கூறுவதினின்றும் தெரியவரும்.

தொண்டீசுவரர் திருக்கோயிலில் அவர்களது நடனம் அரங்கேற்றமாகும் போது, அவை இருந்தோர் கூத்தில் விருப்பம் உடைய இந்திரனுக்கு ஒரு மண்டபம் இருக்க வேண்டும் எனப் பேசிக் கொண்டனர். இதைக்கேட்ட அவர்களுக்கு முற்பிறவி நினைவு வந்தது. அன்று இரவில் அவர்கள் இந்திரனை நினைந்து தூங்காது இருந்தனர். இந்திரன்

மனிதன் போல் வந்து அவர்களது விருப்பத்தை நிறைவேற்றி வந்தான். வேற்று ஆடவர் விருப்பத்திற்கு அவர்கள் இணங் காமையால், அவர்கள் ஈரோட்டில் அரசு செலுத்திய சோழ மன்னனிடம் கூறினர். கணிகையர் இருவரும் தங்களை வரப் பணித்த அரசனது ஆணையின்படி வர மறுத்து விட்டனர். ஒரு நாள் தொண்டீசுவரர் திருக்கோயிலில் அரசனை அவர் கள் சந்திக்க நேர்ந்தது. அரசன் அவர்கள் இந்திரனைத் தவிர வேறு ஆடவருக்கு இணங்கார் என்பதை அறிந்தான். அவர்கள் சொல்வது உண்மையாயின்,

''தேய மீதிற் பூமாரி செம்பொன்
மாரி பொழிவித்தால்
வாய்மையுடையீர் கற்புடையீர்
மழவெள்விடையோன் அடிமையும் நீர்
தூய்மை உடையீர்'' (28)

என்பது பெறப்படும் என்று அரசன் கூற, அதற்கு அவர்கள் உடன்பட்டனர். அன்று நடுஇரவில் இந்திரன் அரசன் கூறியதை அவர்களிடமிருந்து அறிந்தான்,

''முந்து முடி சேகர வரையும்
முழுதும் அந்த நாடனைத்தும்
சிந்து நறும் பூமாரி செம்பொன்
மாரி பொழிந்தனவால்'' (30)

பூ மாரியும் பொன்மாரியும் பொழிந்தமையால், அந்த நாடு பூந்துறை நாடு என்றும், சென்னிமலை புட்பகிரி என்றும் அழைக்கப்பெறலாயின.

''தடஞ்சிகரப்
பொன்னார் கிரிக்குப் புட்பகிரி
என்றும் போற்றப்பொலிந்தனவால்''

என்பது தலபுராணம்சஞ்சீவனி, சந்தானகரணி, சல்லியகரணி, சமனியகரணி, கசப்பு அற்ற சுட்டி மரம் கருநொச்சி போன்ற அரிய மூலிகைகள் பல அங்கு இருப்பதாக நம்பப்படுகிறது.

## ஆ) தீர்த்தச்சிறப்பு

இங்கு சுப்ரமணியதீர்த்தம், இந்திரதீர்த்தம், அக்னிதீர்த்தம், இயமன்தீர்த்தம், காசிபதீர்த்தம், பட்சிதீர்த்தம், நிருததீர்த்தம், சிவகங்கை மாமாங்கதீர்த்தம், வரடிதீர்த்தம், காளிதீர்த்தம், தேவிதீர்த்தம், செங்கழுநீர்வாவி, விஷ்ணுதீர்த்தம், (நெடுமாலைசுனை), பிரமதீர்த்தம், (தேவர்பாழி), நவவீரதீர்த்தம், சாரதாதீர்த்தம், மார்க்கண்டேயதீர்த்தம், (தெப்பக்குளம்) எனப்பல தீர்த்தங்கள் உள்ளன. மலையின் பின்புறச்சாரலில் மாமாங்க (மகாமக) தீர்த்தமும், பட்சிதீர்த்தமும் (பட்சிபாழி) இருக்கின்றன. இவற்றில் சுப்ரமணியதீர்த்தம், மாமாங்கதீர்த்தம், பட்சிதீர்த்தம் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கனவாம்.

சுப்ரமணியதீர்த்தம் என்பது சரவணப்பொய்கையாம்.

"அரன்
தன்னிகர் திருமகன் சரவணத்திடை
மன்னுபுகுழவியாய் வளர நல்கினான் (1-11-80)

என்றும்,

"பூவியல் சரவணத்தண் பொய்கையில்
வைகும் ஐயன்" (1-11-94)

என்றும் கந்தபுராணம் சரவணப் பொய்கையில் சண்முகன் தோன்றியதைக் குறிப்பிடுகிறது. எனவே முருகனது திருக்கோயில்கள் உள்ள தலங்களில் சரவணப் பொய்கை இருப்பது தானே முறை. இது தெப்பக்குளத்திற்குக் கிழக்கில் செங்கழுநீர்ப் பிள்ளையார் கோயிலுக்குத் தென்கிழக்கில் உள்ளது. இதை குமார தீர்த்தம் என்றும் நல்ல கிணறு என்றும் அழைப்பார்கள். "சாற்றுதற்கரிய தீர்த்தம்" என்பது தலபுராணம். இதில் கார்த்திகை மாதம் கார்த்திகை, தைப்பூசம், வைகாசி விசாகம் மற்றும் வெள்ளி, திங்கட்

கிழமைகள் "தீர்த்தநீராடிச் சேயைத்தெரிசித்தோர் முக்தி அடைவர்" என்று தலபுராணம் இதன் சிறப்பைக் கூறுகிறது.

மகாமக தீர்த்தம் என்ற மாமாங்கத் தீர்த்தம் மலைமேல் தென்மேற்கு திசையில் உள்ள பிள்ளையார் கோயிலை அடுத்துள்ளது.

"வேழ முகேசுவரன் கோயிற்கு எதிர்ச்
சுனையில்
மாமாங்கம் பொங்கி வரு புகழ் கொள் கொங்கு
மண்டலமே"

என்பது கொங்கு மண்டல சதகம். 12 ஆண்டுகளுக்கு ஒரு முறை பங்குனி உத்திரத்தன்று இது பொங்கி வழிகின்றது. மழை இல்லாவிடினும், இது பொங்கி வழிவது ஓர் அற்புதமே. மகநட்சத்திரத்தில் கற்றவனையும், வெண் சாரைப் பாம்பும் குரல் எழுப்ப, நீர் பொங்கி வழிகிறதாம். இதில் குளிப்போரும் இந்த நீரை உட்கொள்வோரும் உடற்பிணி, கோள்பிணி ஆகியவை நீங்கப்பெறுவர்.

பட்சிதீர்த்தம் இரும்புச்சத்து உள்ளதாகத் தெரிகிறது. அதில் நீராடுவோர் தோல் வியாதிகள் நீங்கப்பெறுவர் என்று நம்பப்படுகிறது.

## இ) மூர்த்தியின் மாண்பு:

தமிழ் முனிவனாம் அகத்திய முனிவனின் ஆணையை ஏற்று சூரபன்மன் ஆகியோரின் ஆசிரியனான இடும்பாசுரன் திருக்கேதார மலையை அடுத்துள்ள பூர்ச்சவனம் சென்றான். அங்கு அம்முனிவரால் கொணர்ந்து வைக்கப்பெற்ற சிவகிரி, சக்திகிரி என்ற இரண்டு மலைச்சிகரங்களைஎடுத்துக்கொண்டு வந்தான். பொதிகை வரும் வழியில் சென்னிமலையை அடைந்த அவன் வழி தெரியாது மலைமீது ஏறி மனம் தவித்தான்.

"நத்திலகு பொன்னிநதி நன்கரை அடைந்து
புத்தமுத பாணர் புகழ் புட்பகிரியுற்றான்
மத்து எனநின்று உளமயங்கி வழிகாணான்"

என்பது பழநித் தலபுராணம்.

அதுசமயம் குன்றுதோறாடும் குமரன் அவன் முன் அரச குமரனாகத் தோன்றினான். இடும்பாசுரன் முன் தோன்றிய செவ்வேளின் தோற்றத்தைத் தலபுராணம் மூன்று செய்யுட்களில் அழகு ஓவியமாகத் தீட்டியுள்ளது. "கட்டெழில் மீறிய காவலவன் போல்" என்கிறது தலபுராணம். முருகன் என்றாலே அழகு என்று ஒரு பொருள் உண்டு. "அழகு கனிந்து முதிர்ந்த இளங்கனி" என்றும், "இயலும் நடையும் வடிவும் அழகும் எழுத அரியன்" என்றும் குமரகுருபர அடிகள் தமது முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழில் அருளியுள்ளது இங்கு குறிப்பிடத்தக்கதாம். எனவே அவனது தோற்றம் பேரெழில் மிக்கதாக இருந்ததில் வியப்பு இல்லை. இடும்பாசுரன் மலைமேல் வந்த காரணத்தை அறிந்த பெரும் பெயர் முருகன்,

"வானவர் போற்றுஞ் சென்னி
மாமலை யாகியும் பைந்
தேன் இமிர் பொழில்சூழ் புட்ப
கிரியெனுஞ் சிறந்த பேரும்
ஆனது இவ்வரை யீண்டு என்றும்
அறுமுகக் கடவுள் வைகும்"

என இம்மலையின் சிறப்பை எடுத்துக் கூறினான். அதன் பின் பொதிய மலையை அடையும் வழியும் கூறி இடும்பாசுரனை அனுப்பிவைத்தான்.

"பொருங் கொடிக் குக்குடத்தோன்
பொருவு சன்னிதியில் வெய்ய

கருங் கொடி வாரா வந்தாற்
கரிந்திடும் கரிவுறாதேல்
வருங்கொடி தாயகாலம்'' (௨௦)

என்பது தலபுராணம். அதாவது இங்குள்ள இறைவன் திரு முன் காகம்வரின் கரிந்து போகும்; அவ்வாறு கரியாவிடில், அது எதிர்காலம் துன்பம் நிறைந்துள்ளது என்பதைக்குறிக் கும் என்பதாம். காகத்தை இங்கு குறிப்பிடுவதைச் சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். காகம் நவகோள்களில் சனி பகவானின் ஊர்தி. மேலும் இது மூதேவியின் கொடியுமாம். ஒருவர் மற்றொருவரை மனம் நொந்து திட்டும் போது ''சனியன்'' என்பது உலக வழக்கில் உள்ளது. முற்காலக் கோயில்களில் எடுத்துக்காட்டாகத் தஞ்சாவூர் பெரிய கோயில், திருநெல்வேலி மாவட்டம் திருவாலீசுவரர் திருக் கோயில் போன்றவற்றில் நவகோள்கள் கிடையாது; சனிபக வான் திருமுன் மட்டுமே உள்ளது. ஏனைய கோள்களையும் அமைக்கும் வழக்கப் பிற்காலத்தில் ஏற்பட்டது. மேலும் சோதிடர்கள் துன்பத்தைப் போக்க அல்லது குறைக்க சனி பகவானைப் பூசிக்க வேண்டும் என்று கூறுவது யாவரும் அறிந்த ஒன்றே, நவகோள்களில் சனிபகவான் தான் சனீசு வரன் என்று அழைக்கப்பெறுகிறான்; ஏனைய கோள்கள் ஈசுவரன் எனப்படுவதில்லை. இவற்றினின்றும் சனிபகவானுக் கும் துன்பங்களுக்கும் உள்ள நெருங்கிய தொடர்பு, அதை நீக்க மக்களுக்கு உள்ள ஆர்வம், இவற்றை உணரலாம். காகம் சனிபகவானைக் குறிப்பால் உணர்த்துகிறது. எனவே சென்னிமலை இறைவன் முன் காகம் பறந்தால் அது கரிந்து விடும் என்றால், அவன் திருமுன் எல்லாத் துன்பங்களும் நீங்கி விடும் என்பது பொருளாம். இது இங்குள்ள மூர்த்தி யின் மாண்பினை உணர்த்துகிறது.

''நீருண்டு பொழிகின்ற காருண்டு விளைகின்ற
நிலனுண்டு பலனுமுண்டு

நிதியுண்டு துதியுண்டு மதியுண்டு கதிகொண்ட
நெறியுண்டு நிலையுமுண்டு
ஊருண்டு பேருண்டு மணியுண்டு பணியுண்டு
உடையுண்டு கொடையுமுண்டு
உண்டுண்டு மகிழவே உணவுண்டு சாந்தமுறும்
உளமுண்டு வளமுமுண்டு
தேருண்டு கரியுண்டு பரியுண்டு மற்றுள்ள
செல்வங்கள் யாவுமுண்டு
தேனுண்டு வண்டுறு கடம்பணியும் நின்பதத்
தியான முண்டாயில் அரசே''

என்று அருளியுள்ளார் அருட்பிரகாச வள்ளலார். தன்னை அடைக்கலம் அடைந்த அன்பர்களுக்கு வேண்டுவன வேண்டியவாறு வேண்டுமளவும் வாரி வாரி வழங்கும் வள்ளல் இங்கு இடுப்பில் கோவண ஆடையுடன் விளங்கு கின்றான். இதில் ஒரு மாபெரும் உண்மை பொதிந்து உள்ளது உலகப் பொருள்களில் விருப்பம் கொள்வது துன்பத்திற்குவிந்தது. விருப்பு அற்றவனுக்குத் துன்பம் இல்லை. விருப்பு அற்றால், வேண்டியவற்றைப் பெறலாம்.

'வேண்டின் உண்டாகத்துறக்க துறந்தபின்
ஈண்டு இயற்பால பல'' (342)

என்பது தமிழ் மறையாம் குறள். நன்மைகளை அடைய வேண்டின், துறத்தல் வேண்டும். இதை உலகுக்கு உணர்த்த வே உமைமைந்தன் இங்கு கோவணாண்டியாகக் காணப்படு கிறான். தன்னை அடைக்கலம் அடைந்தவர்க்கு எல்லா வளங்களையும் வாரி வழங்கும் வள்ளல் பற்றற்றவனாக இருக்கிறான். அவன் துறவுக்கோலம் பூண்டது அன்பர் களுக்கு அருள்மாரி பொழியத்தான் இவன் கோவணாண்டி யாக இருப்பினும், தன் அடியார்களுக்கு ''சகல செல்வ யோக மிக்க பெருவாழ்வு'' அளிக்கிறான். இதைப் பிச்சை உகக்கும் பெம்மானின் இயல்புடன் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும்.

''பாரிடஞ் சூழ்வர தான் பலி கொண்டுந்தன்
பாதமலர்
சேர் அடியார்க்கு ப்பெருவாழ்வு அளிப்பான்''

என்பர் தமது திருக்கருவைக் கலித்துறை அந்தாதியில் வரதுங்க பர்ண்டியன் என்ற பாண்டிய மன்னன்.

''மூர்த்தி தலம் தீர்த்தம்
முறையால் தொடங்கினோர்க்கு ஓர்
வார்த்தை சொலச் சற்குருவும்
வாய்க்கும் பரா பரமே'' (156)

என்பர் தாயுமான அடிகள். மூர்த்தி, தலம், தீர்த்தம் என மூன்றும் ஒரு திருக்கோயிலுக்குச் சிறப்பாக அமையவேண்டும். அத்தகு மூன்று சிறப்புகளையும் கொண்டது சென்னிமலை.

4. படிகளால் அமைந்த மலைவழி:

முகப்பில் இரண்டு யானைகளைக் கொண்ட இந்திர விநாயகர் கோயில் உள்ளது மக்கள் இவரை நல்ல கிணற்று விநாயகர் என்று அழைக்கிறார்கள். அதனை அடுத்து செங்கழு நீர்ப்பிள்ளையார் கோயில் உள்ளது அதற்கு தென் கிழக்கில் தான் குமாரதீர்த்தம் என்ற கிணறு காணப்படு கிறது. இந்திர விநாயகர் கோயிலுக்கு மேற்கில் படிக்கட்டு களுடன் கூடிய தெப்பக்குளம் உள்ளது. இது மார்க்கண்டேய தீர்த்தம் எனப்படும்.

மலையில் சிலபடிகள் ஏறியவுடன், காவற் கடவுளான இடும்பனுடன் கடம்பவனேசுவரர் என்ற இலிங்கம், கந்தன் ஆகியோரைக் கொண்ட கோயில் உள்ளது. இரு கைகள் கொண்ட கந்தன் தலையை கிரீடம் அலங்கரிக்க, வலது வலது கையில் வேலும், இடது கை கோழியுடன் கடி முத்திரையிலும் காணப்படுகின்றன. முருகனது காலடியில் இடும்பன் கீழே வீழ்ந்த நிலையில் உள்ளான். வேலனுடன்

நடந்த போரில் இடும்பன் கொல்லப்பட்டதை இது சுட்டிக் காட்டுகிறது. தனியாக உள்ள இடும்பனது தலையில் அழகான கிரீடம் காணப்படுகிறது. வலது கையில் கதையும், இடதுகை, தோளில் சாத்தப்பெற்ற சிவகிரி, சக்திகிரி என்ற இரண்டு மலைச் சிகரங்களை கொண்டகாவடியைப் பிடித்த நிலையிலும் அமைக்கப்பட்டுள்ளன.

மயில் வாகனக் கொறடு என்பது சற்று மேலே உள்ளது. இது விசயநகர மன்னர்களால் கட்டப்பெற்றது என்று சொல்லப்படுகிறது. இதற்குமேல் வள்ளியம்மன் பாதம் என்ற மண்டபமும், வழிநடை அலுப்பை நீக்கிக்கொள்ள இளைப்பாறி மண்டபமும் உள்ளன. இதற்கு மேல் சாவான் கோயில் உள்ளது.

இதைத் தாண்டிச் சென்றால், ஆற்றுமலை விநாயகர் கோயில் உள்ளது. ஆறு என்றால் வழி என்று பொருள். வழியில் இடையூறு இன்றி திருக்கோயிலை அடைய இவர் விளங்குவதால் ஆற்றுமலை விநாயகர் எனப்படுகிறார். இவர் ஆத்தி விநாயகர், ஆதிவிநாயகர், மலை விநாயகர் என்றும் பலபட அழைக்கப்பெறுகிறார். இங்கு சிறிய நீண்ட இலைகளை உடைய துரட்டி மரம் உள்ளது. பேய், பிசாசு பிடித்தவர்கள் இதற்குமேல் செல்ல முடியாது. பேய், பிசாசு ஆகியவற்றை ஓட்டித் துரட்டுவதால், இது துரட்டி மரம் எனப் பெற்றது. இதற்குமேல் திருக்கோயில் உள்ளது.

## 5. திருக்கோயில் அமைப்பு:

திருக்கோயிலின் முன்னால் பெரிய புளிய மரமும், அதனடியில் பிள்ளையாரும் உள்ளனர். இவரைப் புளியடி விநாயகர் என்பர். வாயிலைக் கோபுரம் அணிசெய்ய வில்லை. இந்தத் திருக்கோயில் ஒரு திருச்சுற்று மட்டும் கொண்டது திருச்சுற்றின் தென்புறத்தில் நந்தியுடன் கூடிய மார்க்கண்டேசுவரர் திருமுன் உள்ளது. மார்க்கண்டேய

முனிவர் கோத்திரத்தில் வந்த சிவாசாரியர்களால் மனை மேல் தாபனம் செய்து, வழிபாடு செய்யப்படுகின்றமையால், இவன் மார்க்கண்டேசுவரர் என்று அழைக்கப்படுகிறான். இங்குள்ள புரைகளில் தெற்கில் ஆலமர் செல்வனும், மேற்கில் இலிங்கோற்பவரும் அமைக்கப்பட்டுள்ளனர். திருச்சுற்றின் மேல் புறத்தில் மூலப் பிள்ளையாரும், நந்தியுடன் கூடிய இமயவல்லியின் திருமுன்னும் உள்ளன வடபுறத்தில் விசுவநாதர் விசாலாட்சியும், தலமரமான புளியமரமும் உள்ளன. கீழ் புறத்தில் நவகோள்கள் காணப்படுகின்றன. வாயிலின் இருபுறமும் சூரியனும் சந்திரனும் அமைக்கப் பட்டுள்ளனர்.

கருவறையின் அதிட்டானம் வரி, வரிமானம், கூடுகளுடன் கூடியகபோதம் போன்ற அமைப்பு, தாமரை இதழ் ஆகியவற்றைக் கொண்டது. கருவறை மற்றும் அர்த்த மண்டம் ஆகியவற்றின் வெளிப்புறச் சுவர்களில் அரைத் தூண்கள், கும்பபஞ்சரம் ஆகியவை உருவாக்கப்பட்டுள்ளன. அரைத்தூண்கள் மற்றும் கும்பபஞ்சரங்கள் ஆகியவற்றி லுள்ள பலகைக்கும் தாமரை இதழுக்கும் இடையில் துவாரங் கள் நுணுக்கமாக அமைக்கப்பட்டுள்ளன. இவை சிற்பியின் கலை வண்மைக்கு ஒரு எடுத்துக்காட்டாக விளங்குகின்றன. கருவறையின் சுவர்களுக்கு மேல் புறத்தில் கூடுகளுடன் கூடிய கொடுங்கை அமைக்கப் பட்டுள்ளது. இதற்கு மேல் தூபியு டன் 3 அடுக்குகள் கொண்ட விமானம் உள்ளது. அவற்றில் சதுர அமைப்புகளான கூடங்களும், நீண்ட சதுர அமைப்பு களான சாலைகளும் மாலை போன்று சுற்றிலும் காணப் படுகின்றன. விமானத்தின் மேற்றளங்களில் தெற்கில் ஆலமர் செல்வனும், ஆடல்வல்லானும், கிழக்கில் தண்டாயுத பாணியும், இருதுணைவியருடன் முருகனும், மேற்கில் இரு துணைவியருடன் திருமாலும், இருதுணைவியருடன் மயில் மீது கந்தவேளும், வடக்கில சூரியன், பிரமா, மற்றும் பிச்சை உகக்கும் பெம்மானும் அமைக்கப்பட்டுள்ளனர்.

திருக்கோயில் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம், முக மண்டபம் ஆகியவற்றைக் கொண்டது. அர்த்த மண்டத்தின் வாயிலுக்குத் தென் புறத்தில் பிரதான பிள்ளையாரும், வடபுறத்தில் திருவீதி உலா நாயகரும் (உற்சவர்) உள்ளனர். 4 தூண்களைக் கொண்ட மாகமண்டத்தின் வடபுறத்தூண் ஒன்றில் மானின் 4 உடல்களுக்கு ஒரு தலை அமைத்த சிற்பம் உருவாக்கப்படடுள்ளது. மகாமண்டபத்தின் வாயிலுக்கு இருபுறமும் வாயிற் காப்போர் காணப்படுகின்றனர். இவர்களுக்கு 4 கைகள் உள்ளன. பின் இருகைகளும் கத்திரி முத்திரையில் அமைந்து, வலது கையில் சக்தியும், இடது கையில் வச்சிரமும் உள்ளன முன் வலது கை கதை மீதும், முன் இடது கை ஆசி முத்திரையிலும் உள்ளன. பின்புறததில் சிங்கம் அதையாக உட்கார்ந்த நிலையில் காணப்படுகிறது. இந்த இரண்டு உருவங்களும் எழிலுடன் உருவாக்கப்பட்டுள்ளன. வாயிற்காப்போரே விலங்களின் அரசனான சிங்கத்தை அடக்கும் திறமை உடையவர் என்றால், அவர்களின் தலைவனான தாரகாரி அளப்பற்ற ஆற்றல் படைத்தவன் என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

மகாமண்டபத்தின் கீழ்புற வெளிப்புறச் சுவரில் வாயிலுக்கு வடபுறப் புரையில் புதனும், தென்புறப் புரையில் சனிபகவானும் காணப்படுகின்றனர். ஏனைய நவ கோள்களில் மேலபுற வெளிச்சுவரிலுள்ள புரைகளில் இருவர், தெனபுற வெளிச்சுவரிலுள்ள புரைகளில் இருவர், வடபுற வெளிச்சுவரிலுள்ள புரைகளில் மூவர் என மகாமண்டபததின் வெளிப்புறச் சுவர்களில் உள்ள புரைகளில் நவகோள்கள் காணப்படுகின்றனர். இத்தகைய அமைப்பு வேறு எங்கும் இல்லாத ஒன்றாம. திருசுற்றில் ஒருமுறை வலம் வந்தாலே, வழிபடும அனபர் தம்மை அறியாமலே நவகோள்களைச் சுற்றி வந்து விடுகிறார். எனவே நவகோள்களைத் தனியாகச் சுறற வேண்டியதில்லை. இருப்பினும் திருச்சுற்றின்

கீழ்புறத்தில் நவகோள்கள் தனியாகவும் உள்ளன. அர்த்த மண்டபம் மற்றும் மகாமண்டபம் இவற்றிற்கு இடையில் உள்ள சுவரில் "கந்தர் சஷ்டி கவசம்" இயற்றிய தேவராயர் தன் துணையருடன் காணப்படுகிறார். முகமண்டபத்தின் விதானத்தில் 12 இராசிகளும், 27 நட்சத்திரங்களும் உரு வாக்கப்பட்டுள்ளன. இங்குள்ள கொடி மரத்திற்கு முன்னால் உள்ள வேல் பாரவேல் எனப்படுகிறது. கொடி மரத்தில் முருகனின் ஞானசக்தி தர வடிவு அமைக்கப்பட்டுள்ளது. இந்த இடத்தில் இறை அன்பர்களுக்கு அருள் ஏற்படுகிறது. கொடி மரத்திற்கு முன்னால் மயில் ஊர்தி உள்ளது.

கருவறையின் மேல்புற வெளிப்புறச் சுவரில் உள்ள புரை யில் சரவணபவரும், தென் புற வெளிப்புறச் சுவரில் உள்ள புரையில் அக்னி ஜாத சுப்ரமணியரும், வடபுற வெளிப்புறச் சுவரில் உள்ள புரையில் கோமுகத்திற்குமேல் செளரேய சுப்ரமணியரும், அர்த்த மண்டபத்தின் தென்புற வெளிப் புறச் சுவரில் உள்ள புரையில் சிகிவாகனரும் வடபுற வெளிப் புறச் சுவரில் உள்ள புரையில் தேவ சேனாபதியும் காணப்படு கின்றனர்.

கருவரையில் உள்ள மூலவர் இரு கைகள் உடையவன் அவன் வலது கையில் தண்டு ஏந்தியுள்ளான். இடது கை கடிமுத்திரையில் அதாவது இடுப்பில் வைக்கப்பட்டுள்ளது. தலை மொட்டையாக இருப்பினும், பின்னால் சிகை உள்ளது. கோவணம் அணிந்துள்ள அவனது இடுப்பில் புல்லாலான ஆடை காணப்படுகிறது. மார்பில் முட்புரிநூலும், தலையில் உருத்திராக்க மாலையும் அமைக்கப்பட்டுள்ளன. தாமரை இருக்கைமேல் நின்ற நிலையில் உள்ளான். வலது கால் நேரே இருக்க, இடது கால் சற்று வளைந்து காணப்படுகிறது. இதைதிரிபங்க நிலையென்றும் குஞ்சிதம் என்றும் கூறப்படும். அழகின் திருவுருவான முருகனது திருவுருவப்பொலிவு

"குஞ்சித நிலைத்த சேரடியிரண்டுங்
　　கோவண ஆடையும் மேகலையும்
விஞ்சு நூன் மார்பும் வேத்திரம் உக்கம்
　　விளங்கு கைத்தலங்களும் குழைதாழ்
செந் செவித்துளையும் துணைமலர்க் கண்ணுந்
　　திகழ் தனி வதனமும் பின்றாழ்
எஞ்சிலில் சிகையும்" (11)

என்று தலபுராணத்தில் படிப்போர் கண்முன் கொண்டு தப்பெறுகிறது. இவன் அணிகலன்களை அணிந்துள்ளது

"பரவரிய நவமணி அழுத்துகலனுக்கு அழகு
　　பாலித்து வீறுபெற்ற
பன்னிருபுயம்" (31)

என்று பகழிக் கூத்தர் தமது திருச்செந்தூர் பிள்ளைத்தமிழில் குறிப்பிட்டபடி அணிகலன்களுக்கு அழகு செய்வதாக உள்ளது.

"குமார தந்திரம்" என்ற நூலின்படி, கந்தன் என்ற வடிவு ஒரு தலையும் இரண்டு கைகளும் கொண்டது. இடுப்பில் பட்டை அணிந்திருப்பான். கோவணத்தைத் தவிர மேலாடை ஏதும் இருக்காது. வலதுகையில் தடியும், இடது கை கடி முத்திரையில் இருக்கும். இந்த வடிவைப் பழனி ஆண்டவர் என்று மக்கள் அழைப்பர். "ஸ்ரீதத்வநிதி" என்ற நூலின்படி, பிரமச்சாரி சுப்ரமணியன் இரண்டு கைகளுடன் தாமரை மலர் மீது நின்ற நிலையில் உருவாக்கப்படுவான். தலையில் குடுமியும், மார்பில் முட்புரிநூலும், இடையில் புல்லாலான ஆடையும், கோவணமும் காணப்படும். வலது கையில் தடியும், இடது கையில் வச்சிரமும் இருக்கவேண்டும். இவனைத் திரிபங்க நிலையில் உருவாக்க வேண்டும். இந்தத் தலத்தில் உள்ள மூலவரை மேலே குறிப்பிட்ட நூல்கள் இரண்டில் குறிப்பிட்டவற்றுள் ஒப்பிட்டுப் பார்த்தால்,

இதைப் பிரமச்சாரி சுப்ரமணியன் என்று கொள்ளவேண்டும். மேலும் ''ஸ்ரீதத்வநிதி''யில் மட்டும் கூறப்பட்டுள்ள அக்னி ஜாத சுப்ரமணியன் மற்றும் சௌரபேய சுப்ரமணியன் வடிவங்கள் இங்குள்ள புரைகளில் காணப்படுகின்றன. இந்தத் திருக்கோயிலில் உள்ள சரவணபவன், மற்றும் தேவசேனா பதி என்ற வடிவங்கள் 'குமாரதந்திரம்' என்ற நூலின்படி அமைக்காது, ''ஸ்ரீதத்வநிதி' என்ற நூலின்படி உருவாக்கப் பட்டுள்ளன. எனவே இங்குள்ள மூலவரை பிரமச்சாரி சுப்ரமணியன் என்றே உறுதி செய்ய வேண்டியுள்ளது.

இந்தத் திருக்கோயிலில் முருகன் மூலவராக இருப்பதால், ஆகமங்களின்படி, இதை சுவயம் பிரதான கோயில் என்று கூறலாம்.

மூலவர் பிரமச்சாரி சுப்ரமணியனாக இருப்பதால், இவருடன் துணைவியரை அமைக்கவில்லை. சென்னிமலை ஆண்டவர் திருக்கோயிலுக்குப் பின்னால் சிலபடிகள் சென் றால், அங்குள்ள திருக்கோயிலின் கருவறையில் அமிருத வல்லி, சுந்தரவல்லி ஆகியோரின் திருவுருவங்கள் உள்ளன. திருமாலின் புதல்விகளான இவர்கள் சரவணப் பொய்கையில் முருகனை மணம்புரிய வேண்டி, அவனை நோக்கித் தவம் புரிந்தனர். அவனது ஆணையின்படி, அவர்கள் தெய்வயானை யாகவும், வள்ளியாகவும் பிறந்து செவ்வேட்சேயை மணந்த னர் பிரமச்சாரி சுப்ரமணியன் என்ற மூலவருக்கு ஏற்ப, இவர்களை அமிருதவல்லி, சுந்தரவல்லி எனப்படுவது பொருத்தமே.

இங்குள்ள திருவாசி ஒரே கல்லில் உருவாக்கப்பட்டுள் ளது. சுந்தரவல்லி, அமிருதவல்லி என்ற இருவரின் திருவுரு வங்களும், இவற்றிற்கு இடையில் இலிங்கமும் திருவாசியின் பீடத்தில் தாபனம் செய்யப்பட்டுள்ளன. இருத்திருக்கோயில் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம் ஆகியவற்றைக் கொண்டது. மகாமண்டபத்தின் தூண்களில் ஒன்றில் இரு

துணைவியருடன் மைசூர் மன்னர் தேவராச உடையாரும், மற்றொன்றில் திருப்பணி செய்த அவரது காரியஸ்தரான முத்துவசவய்யனும் உருவாக்கப்பட்டுள்ளனர். வடபுறத் தூண் ஒன்றில் இருதுணைவியருடன் மயில் மீது முருகன் காணப்படுகிறான். திருச்சுற்றில் மயில் கருவறையை நோக்கி உள்ளது.

அம்மன் கோயிலுக்கு மேற்கே மேலும் சில கரடுமுரடான படிகளை ஏறிச் சென்றால், தன்றாசியப்பன் கோயிலை அடையலாம். இங்கு சத்ய ஞான முனிவரின் சமாதியும், அவரது சீடரான சரவண முனிவரின் சிலையும் உள்ளன. சத்ய ஞான முனிவர் சித்துகள் கை கூடப்பெற்றவர். பொய் நாக்கு, புண்நாக்கு என்று அடிக்கடி இவர் சொல்லி வந்தமையால், இவர் புண்நாக்கு சித்தர் எனப்பெற்றார். பழனியில் போகர், மருதமலையில் பாம்பாட்டி சித்தர், ஊதிமலையில் கொங்கணர் சமாதிகள் இருப்பது போல், இங்கு புண்நாக்கு சித்தர் சமாதி உள்ளது. சென்னிமலையை அடுத்துள்ள பிடாரியூர் என்ற திருவிருந்தபுரத்தைச் சார்ந்த சிவமறையவர் சரவண முனிவர் என்பவர். இவர் திருவாவின்குடியில் உள்ள முருகன் திருவருளால் காஞ்சி புரத்தில் உள்ள செப்பேட்டினின்றும் சென்னிமலையின் பெருமையை வேறு செப்பேட்டில் எழுதி வந்தார். அதன் அடிப்படையில் 207 செய்யுட்களால் ஆறு மான்மியங்களைக் கொண்டதல புராணத்தை இயற்றினார். இவரது சமாதி இந்தக் கோயிலின் வடபுறத்தில் உள்ளது. கோயிலுக்குத் தென்புறத்தில் புண்நாக்கு சித்தர் வாழ்ந்த குகை உள்ளது. இவர் இங்கு வாழ்ந்த காரணத்தால், முதலில் சன்னாசிக் குகை என்று அழைக்கப் பெற்று, நாளடைவில் தன்னாசிக்குகை என மருவிவிட்டது.

இங்கு வேல்களுடன் சங்கிலிகளும் காணப்படுகின்றன. சிவாலயச் சோழனின் பிரமஹத்தி என்ற தீவினை இங்கு நீங்கப்பெற்றதால், பைத்தியம் பிடித்தவர் குணம் அடைய

இங்கு வேண்டிக் கொள்ளப்படுகிறது. அவர்களது பைத்தியம் நீங்கியபின், அவர்களைக் கட்டியிருந்த சங்கிலிகளை இங்கு வேண்டுதலையாகச் செலுத்தப்படுகிறது. இந்தக் கோயிலின் முன்புறத்தில் உள்ளது முனியப்பன் எனப்படுகிறது. முற்காலத்தில் ஆடு, கோழி ஆகியவற்றைப் பலியிடும் வழக்கம் இருந்துவந்தது. தற்போது அது மறைந்துவிட்டது.

இந்தத் தலத்து புராணத்தை இயற்றிய சரவணமுனிவர் முருகனது கோயிலை எடுப்பித்தமைக்கும், தேர் செய்தமைக்கும், தேர்த்திருவிழா நடத்தியமைக்கும் தலபுராணத்தில் அகச்சான்றுகள் உள்ளன. சிவாலயச் சோழன் என்பான் இந்தக் கோயிலைக் கட்டியதாகச் செவிவழி செய்தி ஒன்றும் இங்கு நிலவுகிறது. அதன்படி, பிரமஹத்தி என்ற தீவினையால் பீடிக்கப்பட்ட சிவாலயச் சோழன் அது நீங்கவேண்டி புண்ணிய ஆறுகள் பலவற்றில் நீராடி வந்தான். அவன் இங்கு வந்து காஞ்சி மாநதியில் குளித்துக் கொண்டிருக்கும் போது, அவனுக்கு மேல்புறமாக 10 வயதுச் சிறுவன் ஒருவன் அழுக்குத் துணியைத் துவைக்கத் தொடங்கினான். அதைக் கண்ட அரச ஊழியர்கள் அவனை அடித்தனர். அரசன் அவர்களைத் தடுக்க சிறுவன் மறைந்துவிட்டான். அதன் பின் மலைமேல் முருகன் தோன்றினான் என்றும், சிவாலயச் சோழன் இந்தத் திருக்கோயிலை எடுப்பித்ததாகவும் கூறப்படுகிறது.

மலையடிவாரத்திலுள்ள கல்வெட்டினின்றும் கோமாறவர்மன் சுந்தரபாண்டியன் இந்தக் கோயிலுக்கு நிலங்களை நிவந்தம் அளித்ததாகத் தெரிகிறது. இவன் கொங்கு பாண்டிய மன்னனாக இருக்கலாம். பாண்டியப் பேரரசின் பிரதிநிதியான சுந்தர பாண்டியன் கி.பி 1285 முதல் 1300 வரை கொங்கு நாட்டில் ஆட்சி செலுத்தியுள்ளான். இதையும், இந்தத் திருக்கோயிலில் உள்ள தூண்களின் போதிகை, கும்பபந்தாரம் ஆகிய அமைப்புகளையும் கருத்தில் கொண்

டால், இதன் காலம் 12 அல்லது 13ஆம் நூற்றாண்டாகக் கொள்ளலாம்.

6. சமயச்சிறப்பு:

பிறையணிபெம்மானாம் சிவபெருமானுக்கு மூவரின் தேவாரம், மற்றும் மணிவாசகப் பெருந்தகையாரின் திருவாசகம் போன்றும், கொண்டல் நிற வண்ணனாம் திருமாலுக்கு ஆழ்வார்களின் நாலாயிரத் திவ்ய பிரபந்தம் போன்றும் குன்றம் கொன்ற குமரனுக்கு அருணகிரிநாதரின் திருப்புகழ். அவர் ஆறுமுக அண்ணலின் திருவருட்கடலில் திளைத்து தித்திக்கும் தீந்தமிழில் திருப்புகழை வாய் மணக்க மனம் இனிக்கப் பாடியவர். தமிழகத்தில் உள்ள குன்று தோறும் சென்று அங்குள்ள குமரனை வடமொழி சொற்கள் கலந்த தமிழில் சந்த இசையுடன் படிக்கப் படிக்கத் தெவிட்டாத் தமிழில் திருப்புகழ் மாரி பொழிந்துள்ளார் அவர் இங்கு உறையும் முருகன்மீது 4 திருப்புகழ் வாசிகள் பாடியுள்ளார். "புகழ் பரவு செஞ்சொல் வேதம்" என்ற திருப் புகழில்,

"எழில் கொண்ட காளி நகராள்வோன்
திருமுக மலர்ந்தநாதர்
அருள் புரி குழந்தை வேலர்
சிரகிரி அமர்ந்து வாழும் முருகோனே"

எனக் குறிப்பிட்டுள்ளார். சென்னிமலைக்கு இரண்டு கிலோத் தொலைவில் உள்ள பிடாரியூர் என்ற ஊருக்கு திருவிருந்தபுரம், காளிமாநகரம் என்ற பெயர்கள் உண்டு. இங்குள்ள திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவன் பெயர் திருமுகமலர்ந்த நாதர் என்பது. இந்நிலையில் சிரகிரியை சென்னிமலை என்று கொள்ளலாம். மேலும் "சென்னிமலை ஆண்டவர் காதல்" என்ற நூலில் சென்னி மலையை "சிரகிரி" என்று ஓதப்பட்டுள்ளது. "பகல்

இரவினில் தடுமாறா'' என்ற திருப்புகழில் அருணகிரி நாதர் அனுபூதி நிலைதர குமரனை வேண்டுகிறார். அதே திருப்புகழில் ''இயல் இசையில் முத்தமிழோனே'' என்று முருகனை அழைப்பதன்மூலம் முருகனைத் தமிழ்க் கடவுள் என்பதை வலியுறுத்துகிறார். அருணகிரிநாதரின் திருப் புகழுக்கு மகிழ்ந்து வள்ளி மணவாளன், தன்தந்தையாகிய சிவபெருமான் சம்பந்தப் பெருமானுக்கும் நாவுக்கரசுப் பெருமானுக்கும் திருவீழி மிழையில் கோயிலில் காசு வைத்து அருளியதைப் போன்று, இங்கு காசு வைத்து அருளினான். இதை அங்கண்ண செட்டியார் தமது சென்னிமலை ஆண்டவர் காதல் என்ற நூலில்,

''நாட்டில் அருணகிரிநாதன் திருப்புகழ் சொல்
பாட்டின் மகிழ்ந்து படிக்காசு அளித்தபிரான்''

எனப் போற்றியுள்ளார்.

## 7. நவகண்ட சிற்பம் :

பண்டைத் தமிழகத்தில் போரில் இறந்துபட்ட வீரனுக்கு 'நடுகல்' நடும் மரபு இருந்தது. நடுகல்லைத் தவிர வேறு கடவுள் இல்லை என்பது தமிழர் துணிபு. இதனைப் புற நானூறு போன்ற சங்ககால இலக்கியங்களினின்றும் தெரிய லாம். இறந்துபட்ட மனைவி தீப்பாய்ந்து உயிரை மாய்த் தால், அதற்காக நடப்படும் கல் ''மாசதிக்கல்'' எனப் பெறும். வீரன் ஒருவன் தன் விரதம் நிறைவேறியமைக்கு தன் தலையைக் கொற்றவைக்கு அரிந்து கொடுப்பதை ''நவ கண்டம்'' கொடுத்தல் என்று சொல்லப்படும். இதற்காக நடப்படும் கல் ''சாவஸ்கல்'' என்றும் ''நவகண்ட சிற்பம்'' என்றும் அழைக்கப்பெறும். சிலப்பதிகாரம், கலிங்கத்துப் பரணி போன்ற நூல்கள் இதற்குச் சான்று பகர்கின்றன. மேலும் இத்தகைய சிற்பங்கள் மகாபலிபுரம், திருச்சி போன்ற குடைவரைக் கோயில்களிலும் காணப்படுகின்றன.

இவற்றில் வீரன் தனியாகவோ அல்லது கொற்றவையுடனோ உருவாக்கப்படுவான். அத்தகைய நவகண்ட சிற்பம் ஒன்று திருக்கோயிலுக்குச் செல்லும் வழியில் இளைப்பாறி மண்டபத்திற்கும் ஆற்றுமலை விநாயகர் கோயிலுக்கும் இடையில் உள்ளது. இங்குள்ள வீரன் தலையில் நடுகற்களில் காணப்படும் வீரனின் கொண்டையைப் போன்ற கொண்டை அமைக்கப்பட்டுள்ளது. வலது கையால் கத்தியைப் பிடித்து தன் கழுத்தைத் தானே குத்திக் கொள்ளும் அவனது இடது கை இடுப்பில் வைக்கப்பட்டுள்ளது.

8. கலைச் செல்வம் :

"என்றும் அகலாத இளமைக்கார" என்பர் அருணகிரி நாதர். இளமையும் அழகும் பிரிக்க முடியாத ஒன்றாம். இதைத்தான் இளங்கோவடிகள் தமது சிலப்பதிகாரத்தில்,

"மூவா இளநலங்காட்டி" (9-வல 85) என்பர் இளமையும் அழகும் ஒருருப் பெற்ற முருகனது "மணங்கமழ் தெய்வத்து இளநலத்தை" அவனது அடியார்களும் பகைவர்களும் ஒருங்கே போற்றியதற்கு திருப்புகழ், திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ், திருப்போரூர் முருகன் பிள்ளைத்தமிழ், கந்தபுராணம் ஆகியவை சான்றுகளாக உள்ளன. எடுத்துக் காட்டாக கந்தபுராணத்தில் அவனது கொடிய பகைவனான சூரபன்மன்,

"சீர்க்குமரேசன் கொண்ட திருப்பெருவடிவந் தன்னில்
ஏர்க்குறும் ஒளியுஞ் சீரும் இளமையும் எழிலும் எல்லாம்
ஆர்க்குள வுலகில் அம்மா அற்புதத் தோடும் பல்காற்
பார்க்கினுந் தெவிட்டிற் றில்லை இன்னும் என் பார்வைதானும்" (4-13-437)

"ஆயிரகோடி காமர் அழகெலாந்திரண்டொன்
றாகி
மேயின எனினுஞ் செவ்வேள் விமலமாஞ்
சரணந்தன்னில்
தூயநல் லெழிலுக்கு ஆற்றாது என்றிடின்
இளைய தொல்லோள்
மாயிரு வடிவிற்கு எல்லாம் உவமை யார்
வகுக்க வல்லார்" (4-13-439)

"அண்ணலார் குமரன் மேனி அடிமுதல் முடி
யின் காறும்
எண்ணிலா ஆழிகாலம் எத்திறம் நோக்கினா
லுங்
கண்ணினால் அடங்காது உன்னிற் கருத்தினால்
அடங்காது" (4-13-441)

என்றெல்லாம் தன் வியப்பை வெளியிடுகிறான். நண்பர் ஒருவர் புகழ்ந்தால், அது மிகைப்படக் கூறலாக இருக்கும் என்று சந்தேகம் எழலாம். கொடிய பகைவன் ஒருவன் புகழ்கின்றான் என்றால், அது முற்றிலும் உண்மையாகத் தானே இருக்கும்.

இத்தகு அழகு மிக்க செவ்வேட் சேயின் ஆறு திருவுருவங்கள் இங்கு உள்ளன. அவற்றில் ஒன்று மூலவராக உள்ள பிரமச்சாரி சுப்ரமணியன். அர்த்த மண்டபத்தின் தென் புறச் சுவரில் உள்ள புரையில் காணப்படும் சிகிவாகனர் மற்றொரு வடிவமாம். ஆகமங்களின் படி, இவனுக்கு ஒரு தலையும் நான்கு கைகளும் அமைக்க வேண்டும். முன் இருகைகள் அபய, வரத முத்திரைகளில் இருக்க, பின் இருகைகளில் சக்தியும் வச்சிரமும் உருவாக்க வேண்டும். சிகிவாகனர் என்பதற்கேற்ப இங்குள்ள வடிவம் தன் ஊர்தியாம் மயிலுடன் நின்ற நிலையில் உள்ளது. தலையில் கிரீடம் அணியப்

பட்டுள்ளது. ஆகம விதிகளுக்கு ஏற்ப, இவனது முன் வலது கை அபய முத்திரையிலும், முன் இடது கை வரத முத்திரையிலும் உள்ளன. ஆனால் பின் இருகைகளில் சக்தி மற்றும் வச்சிரத்திற்குப் பதிலாக, பின் வலது கையில் அங்குசமும், பின் இடது கையில் பாசமும் அமைக்கப்பட்டுள்ளன. இந்த வடிவம் சாதாரணமாகக் காணப்படும் ஒன்றாம். ஏனைய நான்கு வடிவங்களும் காண்டற் கரியனவாம்.

கருவறையின் தென்புற வெளிப்புறச் சுவரில் உள்ள புரையில் அக்னி ஜாத சுப்ரமணியர் வடிவம் உள்ளது. சூரபன்மனின் கொடுமைகளுக்கு ஆற்றாத தேவர்கள் சிவபெருமானிடம் முறையிட்டனர். அவன் தனக்குரிய ஐந்து முகங்களுடன் அதோமுகம் என்ற முகமும் கொண்டான். அந்த ஆறு முகங்களினின்றும் ஆறு தீப்பொறிகள் வெளிப்பட்டன. அவற்றை அவன் காற்றுக் கடவுளிடம் கொடுக்க, அவன் ஆற்றாது தீக்கடவுளிடம் கொடுத்தான். தீக்கடவுளும் அப் பொறிகளின் வெப்பத்தை பொறுக்க இயலாது, கங்கையில் விட்டான், இதைக் "குட்டிகந்த புராணம்" எனப் பெறும் கந்தர் கலிவெண்பாவில்

குமரகுருபர அடிகள்,

"தேசுதிகழ்
பூங்கயிலை வெற்பிற் புனைமலர்ப் பூங்கோதை இடப்
பாங்கு உறையு முக்கட் பரஞ்சோதி—ஆங்கு
ஒருநாள்
வெந்தவகுவர்க்கு ஆற்றாத விண்ணோர் முறைக்கு
இரங்கி
ஐந்து முகத்தோடு அதோமுகமும்—தந்து
திருமுகங்கள் ஆறாகிச் செந்தழற் கண் ஆறும்
ஒரு முகமாய்த் தீப்பொறி ஆறு — உய்ப்ப
விரிபுவனம்
எங்கும் பரக்க இமையோர்கண்டு அஞ்சுதலும்

பொங்கு தழற் பிழம்பைப் பொற்கரத்தால்—
அங்கண்
எடுத்து அமைத்து வாயுவைக் கொண்டு 'ஏகுதி'
என்று எம்மான்
கொடுத்து அளிப்ப மெல்லக் கொடு போய் —
அடுத்தொரு
"பூதத்தலைவ கொடு போதி எனத் தீக்கடவுள்
சீதப்பகீரதிக்கே சென்று உய்ப்ப"
(வரி 74-80)

என அருளியுள்ளார். அருணகிரிநாதர் தமது திருவகுப்பில்,

"உபயமுறும் அக்நிகர மீதிற் ப்ரபாகரனும்" என்பர். தீக்கடவுளின் இரண்டு கரங்களால் தாங்கப்பட்டு விளங்கியவனாக பேரொளியான மூர்த்தி என்பதாம். தீக்கடவுள் இறைவனின் தீப்பொறிகளைக் கொண்டு சென்றமையால், முருகன் தீக்கடவுளின் மகன் என்று பொருள்பட "அக்னிஜாத சுப்ரமணியன்" எனப்படுகிறான்.

"ஸ்ரீ உத்தவநிதி" என்ற நூலின்படி, அக்னி ஜாத சுப்ரமணியனுக்கு அக்னி போன்று இரு தலைகள் இருக்கும். அவனுக்குள்ள 8 கைகளில், வலது கைகளில் கரண்டி, அதிக மாலை, சக்தி மற்றும் சுவஸ்திச் முத்திரையும், இடது கைகளில் வச்சிரம், கோழி, கேடயம், மற்றும் நெய்யுடன்கூடிய கலம் அமைக்கப்படவேண்டும். வேள்வியில் தீயை வளர்க்க நெய்யும், நெய்யைத்தீயில் உற்ற கரண்டியும் தேவை. இவற்றைத் தீக்கடவுள் தன் கையில் வைத்திருப்பது போன்று, அக்னிஜாத சுப்ரமணியன் கையில் இவை இருக்க வேண்டும். இங்குள்ள வடிவிற்கு "ஸ்ரீ உத்தவநிதி"யின்படி, இருதலைகளும் 8 கைகளும் உருவாக்கப்பட்டுள்ளன. தலைகளில் கிரீடம் இலிங்க, இடது கைகள் மூன்றில் நெய்யுடன் கூடிய கலம், கேடயம் மற்றும் சக்தியும், வலது கைகள் மூன்றில்

கரண்டி, கத்தி, வச்சிரம் உள்ளன. முன் வலது கை அபய முத்திரையிலும், முன் இடது கை கடி முத்திரையிலுங் காணப்படுகின்றன. ஆகமத்தின்படி, அமைக்க வேண்டிய அக்கமாலை மற்றும் கோழிக்குப் பதிலாக கத்தி உள்ளது. சுவஸ்திக் முத்திரைக்குப் பதில் அபய மற்றும் கடிமுத்திரைகள் அமைக்கப்பட்டுள்ளன.

அடுத்துக் காணவேண்டிய திருவுருவம் கருவறையின் வடபுற வெளிப்புச் சுவரில் கோமுகத்திற்கு மேல் உள்ள புரையில் உள்ள சௌர பேய சுப்ரமணியராம். இருள் நீக்கி எழும் ஞாயிற்றின் தோற்றத்தைக் கூவுவதன் மூலம் தெரிவிக்கும் கோழியைச் சேய்தன் கொடியாகக் கொண்டுள்ளான், தெய்வதச்சன் விசுவகர்மன் சூரியனின் வெம்மையினின்றும் சக்தி என்ற படைக்கலத்தை உருவாக்கியதாகச் சொல்லப் படுகிறது. சக்தியாகிய வேலாயுதம் தான் முருகனுக்கு உரிய சிறப்பான படையாம். உமை மைந்தனின் ஊர்தி மயில். அதன் தோகையில் எல்லா நிறங்களும் ஒன்றாக இணைந்து அழகுடன் விளங்குவது சூரியனின் தோற்றத்தை ஒப்ப இருக்கிறது. நக்கீரனார் தமது திருமுருகாற்றுப் படையில்,

"உலகம் உவப்ப வலன் ஏர்பு திரிதரு
பலர் புகழ் ஞாயிறு கடற் கண்டா அங்கு
ஓவற இமைக்கும் சேண் விளங்கு அவிர் ஒளி"
(வரி 1-3)

என முருகனை சூரியனுடன் ஒப்பிட்டுள்ளார். இவ்வாறு வேலனுக்கும் சூரியனுக்கும் நெருங்கிய தொடர்பு காணப்படுகிறது. அறுசமயங்களில் சூரியனை முழுமுதற் கடவுளாகப் போற்றும் சமயம் சௌரம் எனவே சௌர பேய சுப்ரமணியர் வடிவம் அறுமுகனுக்கும் சூரியனுக்கும் உள்ள நெருங்கிய தொடர்பை உணர்த்துவதாகக் கொள்ளலாம், 'ஸ்ரீ தத்வ நிதி' என்ற நூலின் படி, இந்த வடிவிற்கு 4 தலைகள் 8 கைகள் இருக்க வேண்டும். தாமரை மலர் மீது உட்கார்ந்து

இருக்க வேண்டும். வலது கைகளில் சக்தி, தாமரை மலர், மலர் அம்பு ஆகியவையும், இடது கைகளில் வச்சிரம், சூலம், கரும்பு வில்லும் அமைக்க வேண்டும். ஏனைய இருகைகள் அபய வரத முத்திரைகளில் காணப்படும், இவன் நின்ற நிலையில் உருவாக்கப்பட்டால், திரிபங்க நிலையில் இருக்க வேண்டும். இங்குள்ள வடிவின் தலைகளில் கிரீடம் காணப்பட, முன் புறத்தில் 3 தலைகளும், பின் புறத்தில் ஒரு தலையும் ஆக 4 தலைகள் உள்ளன. 8 கைகளுக்குப் பதில் ஆறுகைகள் தாம் உருவாக்கப்பட்டுள்ளன, வலது கைகளில் வச்சிரம், அம்பு, அபய முத்திரையும், இடது கைகளில் கத்தி, வில், வரத முத்திரையும் உள்ளன. இவன் நின்ற நிலையில் அமைக்கப்பட்டுள்ளான்.

கருவறையின் பின்புற வெளிப்புறச் சுவரில் உள்ள புரையில் சிங்க ஊர்த்தியுடன் சரவணபவன் காணப்படுகிறான்.

"நிவந்து ஓங்கு இமயத்து நீலப்பைஞ்சுனைப்
பயந்தோர் என்பப் பதுமத்துப் பாயல்"
(வரி 48-49)

என்பது பரிபாடல். இமயமலையில் சரவணப் பொய்கையில் தாமரைப் பூக்களாகிய படுக்கையில் முருகன் பிறந்தான் என்பதாம். எனவே சரவணபவன் என்று அழைக்கப் பெறுகிறான். சரம் என்றால் நாணல், வநம் என்றால் நீர் அதாவது நாணல் சூழப்பெற்ற பொய்கையில் பிறந்தவன் என்பது பொருள். ச-மங்களம்; ர-ஒளி; கொடை; வ-சாத்வீகம்; ந-போர்; பவன், தோன்றியவன் எனவே மங்களம், ஒளி, சாத்வீகம், வீரம் முதலிய உயர்ந்த பண்புகளுடன் தோன்றியவன் என்றும் பொருள் கூறப்படுகிறது. சரவணன் என்பது சிவபெருமானையும், திருமாலையும் குறிக்கும். எனவே சரவணபவன் என்பவன் சிவபெருமான் திருமால் ஆகிய இருவரின் பண்புகளைக் கொண்டவன் என்ற பொருள் திருச்செந்தூர் புராணத்தில் கூறப்பட்டுள்ளது.

சிவபெருமானுக்கு உரிய மந்திரம் ''நமசிவாய'' என்ற பஞ்சாட்சர மந்திரம் என்றால், முருகனுக்கு உரிய மந்திரம் ''சரவணபவ'' என்ற சடாசரமந்திரம். 'குமார தந்திரம்' மற்றும் ''ஸ்ரீதத்வநிதி'' என்ற இரு நூல்களிலும் இந்த வடிவிற்கு இரு வகையான தோற்றங்கள் விதிக்கப்பட்டுள்ளன. 'குமார தந்திரத்தின்' படி இந்த வடிவிற்கு தலைகள் 12 கைகள் இருக்கவேண்டும் இருகைகள் அபய மற்றும் வரத முத்திரைகளில் இலங்க, ஏனையவற்றில் சக்தி, மணி, கொடி தாமரை மலர், கோழி, பாசம், தடி, உளி, வில் மற்றும் அம்பு ஆகியவற்றை உருவாக்க வேண்டும். முகங்கள் அன்றலர்ந்த தாமரைப் பூப்போன்ற பொலிவுடன் திகழ வேண்டும். ''ஸ்ரீதத்வநிதி'' இந்த வடிவிற்கு ஒரு தலை 6 கைகள் தாம் விதித்துள்ளது. சிங்கத்தின் மீது உட்கார்ந்து, உடல் முழுதும் வெண்ணீறு அணிந்து இருக்க வேண்டும். கைகளில் மலர் அம்புகள், கரும்பு, வில், கத்தி, கேடயம், வச்சிரம் மற்றும் கோழி காணப்பட வேண்டும். ஞாயிற்றைப் போன்ற ஒளியுடன் விளங்க வேண்டும். இங்குள்ள வடிவிற்கு ஒருதலை 6 கைகள் உள்ளன. மூலவர் நீங்கலாக இங்குள்ள முருகனின் ஏனைய வடிவங்களின் தலையில் கிரீடம் இருக்க, இந்த வடிவிற்கு மட்டும் அழகான கொண்டை உருவாக்கப் பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. சிங்கத்தின் மீது உட்கார்ந்து இருப்பதற்குப் பதிலாக சிங்கத்துடன் நின்ற நிலையில் அமைக்கப்பட்டுள்ளான். இவனது வலது கைகளில் அம்பு, கத்தி, வச்சிரம் இருக்க, இடது கைகளில் வில், கேடயம், சக்தி உள்ளன. கோழிக்குப் பதில் சக்தி காணப்படுகிறது.

அர்த்தமண்டபத்தின் வடபுற வெளிப் புறச்சுவரில் உள்ள புரையில் தேவ சேனாபதியின் வடிவம் உள்ளது. உரோமானியர்களுக்கு மார்ஸ் போன்றும், கிரேக்கர்களுக்கு ஏரஸ் போன்றும் தமிழர்களுக்கு முருகன் போர்க் கடவுள். புறநானூறு, மலைபடுகடாம், பொருநராற்றுப்படை, பெரும் பாணாற்றுப்படை, பதிற்றுப்பத்து ஆகிய சங்ககால இலக் கியங்களில் தமிழ் மன்னர்கள் வீரத்தில் முருகனுடன் ஒப்

பிடப்படுகின்றனர். ஆழ்வார்களில் மங்கை மன்னன் 'திறல் முருகன் அனையர்' என்று குறிப்பிட்டுள்ளார் என்றால், அவனது மறப்பண்பை என்ன என்பது!

அறுமுகத்து அண்ணல் இந்திரனிடம்
"நீவிர்
சேனைகளாக நாமே சேனையந்தலைவனாகித்
தானவர் கிளையை யெல்லாம் வீட்டுதும் தள
ரேல் என்றான்"
(கந்தபுராணம் 1-14.106)

இந்த வானவர் தலைவனாகிய வடிவிற்கும் இரு வேறு வகையான விதிகள் கூறப்பட்டுள்ளன. குமார தந்திரத்தின்படி இது 6 முக்ங்கள், 12 கைகளுடன் சூரியனைப் போன்று ஒளிமிக்க வடிவம். ஒரு கை தன் மடியில் உட்கார்ந்து இருக்கும் தேவியை அணைத்துக் கொண்டிருக்க, மற்றொரு கை அபய முத்திரையில் இருக்கும். ஏனையவற்றில் தாமரை, சூலம், வச்சிரம், கேடயம், வில், கதை, ம்ணி, கோழி ஆகியவை இருக்கும். இந்த வடிவிற்கு ஒரு தலை, 4 கைகளைத்தான் ஸ்ரீதத்வநிதி விதித்துள்ளது. இரு கைகள் அபய மற்றும் வரத முத்திரைகளில் இருக்க, ஏனையவற்றில் சங்கும் சக்கரமும் காணப்படுப் பல்வேறு அணிகலன்களும், முப்புரிநூலும் அணியப்பட்டிருக்கும். இங்குள்ள வடிவம் ஸ்ரீதத்வநிதியில் கூறியபடி அமைக்கப்பட்டுள்ளது.

மேலே குறிப்பிட்ட அக்னிஜாத சுப்ரமணியன், சௌரபேய சுப்ரமணியன், சரவணபவன், தேவசேனாபதி சிகிவாகனர் ஆகிய வடிவங்கள் சிறிய அளவில் உருவாக்கப்பட்டுள்ளன. "மூர்த்தி சிறியதாயினும் கீர்த்தி பெரிது" என்றபடி, இவை கண்ணையும் கருத்தையும் கவரும் கவினுடனும், பொலிவுடனும் திகழ்கின்றன.

## 9. இலக்கியச் சிறப்பு:

இத்தலத்தைப் பற்றி சென்னிமலைத் தலபுராணம், மேழிவிளக்கம், சென்னிமலை பிள்ளைத்தமிழ், சென்னிமலை

யமக வந்தாதி, சென்னிமலையாண்டவர் காதல், சென்னி மலை முருகன் புலவராற்றுப்படை ஆகிய நூல்கள் உள்ளன. சென்னுமலைத் தலபுராணம் எளிய நடையில் இயற்றப் பட்டுள்ளது. இது நாடு, நகர், மலை என்றும் காவியப் பொருள்கள் சில அமையப் பாடபெற்றது. எனவே இது சிறு காவிய வகையைச் சார்ந்ததாகக் கருதப்படுகிறது. இந்த நூலில் சவிநயம் ஆங்காங்கு காணப்படுகிறது. எடுத்துக்காட் டாக சிறுநல்லார், பெருநல்லார் என்ற இரு கணிகையர் இந்திரனை அடைய எண்ணிய இரவில் உறங்கவில்லை. இதைக் கூறப் போந்த ஆசிரியர் "படைகொண்டிடு கண்படை கொள்ளா" எனக்கவி நயத்துடன் குறிப்பிட்டுள்ளார். "படைகொண்டிடு படை" என்றால் வேற்படையை ஒத் திருக்கின்ற கண்கள் என்றும், "கண் படை கொள்ளா" என்றால் கண்கள் உறங்கவில்லை என்றும் பொருளாம். ஆசிரியர் எவ்வாறு அழகாகச் சொற்களை ஆண்டுள்ளார் என்பது படித்து மகிழத்தக்க தாம். அவர்கள் இருவரும் இந்திரனைக் கூடியதை சோழ மன்னனிடம் சொன்னதை "பெற்ற பெருப் பேறார் பகர்ந்த வாய்மை" எனக் குறிப் பிட்டுள்ளார். முன் செய்த தவத்தால் கூறிய உண்மை என்கி றார்கள். அதாவது உண்மை கூறுவது என்பது தவமுடை யோர்க்கே முடியும் என்பதாம். பொய்யே மலிந்த இந்நாட் களில் இது எததகைய உண்மையினைச் சுட்டிக் காட்டுகிறது என்பதை உய்த்து உணர வேண்டும். சென்னிமலையில் வேற் படை விமலனின் பிரமச்சாரி சுப்ரமணிய வடிவைக் கண்ட சரவண முனிவன் போற்றி வணங்கும் 'சரவணபஞ்சகம்' என்ற 5 பாடல்களும் (13 முதல் 17 வரை) படிக்கப் படிக்கத் தெவிட்டா இன்பம் அளிப்பதாக உள்ளது. (இவை பிறசேர்க் கை–2 ல் கொடுக்கப்பட்டுள்ளன)

இங்கிருந்து சுமார் 10 கிலோத் தொலைவில் உள்ள மட விளாகத்தைச் சார்ந்தவரும், மைசூர் மன்னர் தேவரா்ச

உடையாரின் காரியஸ்தர்களில் ஒருவருமான தேவராயன் பாடிய ''கந்தர் சஷ்டிக்கவசம்'' இங்குதான் அரங்கேற்றப் பட்டதாகத் தெரிகிறது. அதில் 'சிரகிரி வேலவன் சீக்கிரம் வருக' (வரி 15) என சென்னிமலை இறைவனைத் தான் முதலில் வருக வருக என அழைக்கிறார். இந்த நூலை பாராயணம் செய்யாத முருகனது அன்பர்கள் கிடையாது என்றே சொல்லலாம்.

கவிகாள மேகம் இந்தத் தலத்தைப் பற்றிய பாடல் சுவை பயப்பதாக உள்ளது. அது வருமாறு:

'சென்னிமலை வேலவருக்குச் சேர்ந்த கொம்பு
இரண்டுண்டு
கன்னி குறவள்ளிக்குக் கால் இல்லை—
முன்னமே
ஆட்டுக் கொம்பில்லை ஆனைக்குக் கால்
பாட்டுக்குள் ஆராய்ந்து பார்.

'எ' என்ற உயிர் எழுத்து 'க' என்ற மெய்யெழுத்துடன் சேர்ந்து 'கெ' என்ற உயிர் மெய்யெழுத்தாகும் இதில் உள்ள 'ெ' ஒற்றைக்கொம்பு எனப்படுகிறது. அதே போன்று 'கே' என்பதில் உள்ள 'ே' இரட்டைக் கொம்பு என்பர். 'கொ' என்ற எழுத்தில் 'க' விற்கு அடுத்தபடி வரும் 'ா' கால் என்று சொல்லப்படும். இப்போது பாட்டைப் பார்ப்போம். 'வேலன்' என்ற சொல்லில் 'ே' இருப்பதால், வேலவருக்கு இரண்டு கொம்பு உண்டு என்றார். வள்ளி, ஆனை என்ற சொற்களில் 'ா' இல்லை; எனவே வள்ளி மற்றும் ஆனைக்குக் கால் இல்லை என்றார். ஆடு என்ற சொல்லில் ''ெ'' அல்லது 'ே' இல்லை. எனவே ஆட்டிற்குக் கொம்பு இல்லை என்றார். தமிழ் எழுத்துக்களின் இயல்பைக் கொண்டு அமைநத அருமையான செய்யுள்.

## 10. கல்வெட்டுகள்:

இந்தக் கோயிலின் கருவறையின் இடதுபுற நிலவு வாயிற் சுவரிலும், நுழைவாயில் விதானத்திலும் மைசூர் மன்னர்

களின் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. மலையடி வாரத்தில் கோமாறவர்மன் சுந்தர பாண்டியனின் கல்வெட்டு உள்ளது.

## 11. வரலாற்றுச் சிறப்பு:

இதத்தரு மனையினீங்கி
இடர்மிகு சிறைப்பட்டாலும்
பதத்தரு இரண்டு மாறி
பழிமிகுந்து இழிவுற்றாலும்
விதந்தரு கோடி இன்னல்
விளைந்தென்னை அழித்திட்டாலும்
சுதந்தரதேவி! நின்னைத்
தொழிதிடல் மறக்கிலனே''

என்று வீர முழக்கஞ் செய்து ''நாட்டு விடுதலைப் போரில் தன் உயிரைத் தியாகம் செய்த திருப்பூர் குமரன் என்ற விடுதலை வீரன் பிறந்த பதி இது.

## 12. தொழில் மேன்மை

கைத்தறி நெசவுத் தொழிலில் தமிழகத்திற்கு சங்க காலம் முதற்கொண்டு தனி இடம் உண்டு.

''ஆவியன்ன அவிர்றூற் கலிங்கம்'' (வரி 469)

என்பது பெரும் பாணாற்றுப்படை. அதாவது பாலாவியைப் போன்ற நூலால் செய்த ஆடை என்பதாம். இதினின்றும் இந்தத் தொழில் தமிழகத்தில் அடைந்திருந்த சிறப்பை அறியலாம். தற்காலத்தில் இங்கு போர்வைகள், தலையணை உரைகள் ஆகியவை பல நிறங்களில் கண் கொள்ளா அழகுடன் நெய்யப் பெறுகின்றன. இவை இடம் பெறா கண் காட்சிகள் இந்நாட்களில் நடைபெறுவது இல்லை. இவ்வாறு கைத்தறி நெசவுத் தொழிலில் தமிழகத்தின் தனிச் சிறப்பை சென்னிமலை இன்றும் நிலைநாட்டி வருகிறது.

## 13. திருப்பணிகள் :

மைசூர் மன்னர் தேவராச உடையாரின் காரியஸ்தரான முத்துவசய்யன் காலத்தில் கி.பி. 1654ல் இந்தக் கோயிலின் வெளித் திருப்பணி செய்யப்பட்டது. பல்லடம் வட்டத்தைச் சார்ந்த செங்கத்துறைபூசாரி என்பவர் 18ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். அவர் மலைமேல் மகா மண்டபம், மலைக் கோயிலில் கல் பரவியது, அடிவாரத்தில் உள்ள கைலாய நாதர் கோயிலில் வெளி மண்டபம், உள் மண்டபம், கோபுரம் திருமதில் ஆகிய திருப்பணிகளைச் செய்தார். 19 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வேளாளத்தம்பிரான் பெருந் துறையை அடுத்த வேட்டுவ பாளையத்தைச் சார்ந்தவர் அவர் மலையில் படிக்கட்டு, விளக்குக் கம்பம் பயணிகள் தங்கும் மடம், அம்மன் கோயில் திருமதில் ஆகிய திருப்பணிகளைச் செய்துள்ளார். சேலம் மாவட்டம் இளம் பள்ளி ஜமீன்தாராகிய இராஜலிங்கஞ் செட்டியார் கைலாயநாதர் கோயிலில் சில திருப்பணிகளைச் செய்துள்ளார்.

## 14. பூசை, நடைமுறைகள் முதலியன :

மூலவருக்கு ஆறுகால பூசை நாள்தோறும் நடைபெற்று வருகிறது. பூசைக்கு வேண்டிய தீர்த்தம் ஒரு எருதுக்கு குடம் வீதம் 2 எருதுகள் மூலமாக மலை அடிவாரத்தினின்றும் (மலை உச்சிக்கு நாள்தோறும்) கொண்டு வரப்படுகிறது. இது எங்கும் இல்லாத அரிய நிகழ்ச்சியாகும் பொதுவாகத் திருக் கோயில்களில் பிள்ளையாரை பூசித்த பின்பே மூலவருக்குப் பூசை நடக்கும். இங்கு இதற்கு மாறாக முதலில் மூலவர்தான் பூசிக்கப்படுகிறார். அதன் பின்பே பிள்ளையார், சிவபெருமான் ஆகியோருக்குப் பூசை நடைபெறுகிறது.

சித்ரா பௌர்ணமி, ஐப்பசி கந்தர் சஷ்டி, தைப்பூசம், பங்குனி உத்திரம் ஆகிய திருவிழாக்கள் சிறப்பாக நடைபெறு[illegible]. தைப்பூசத்தன்று தேரோட்டம் நடைபெறுகிறது.

அவ்வமயம் ஆயிரக்கணக்கான அன்பர்கள் கலந்து கொண்டு சென்னிமலை யாண்டவனின் அருளைப் பெறுகிறார்கள். மாதாந்திர அமாவாசை, சஷ்டி, கிருத்திகை ஆகிய நாட்களி லும் மக்கள் அதிக அளவில் வருகின்றனர்.

தலமரமான புளிய மரத்தினூடே சந்தானகரணி என்ற அரிய மூலிகை இருப்பதாகக் கூறப்படுகிறது. மகப்பேறு இல் லாதவர்கள் தலமரத்தின் காற்று தங்கள் மீது படும் படி இதன் கீழ் மா இடிப்பார்கள். அதன் பின் அம்மன் திருக் கோயிலில் மாவிளக்கு ஏற்றிவைத்து, வணங்குவார்கள். இதனால் தாங்கள் விரும்பும் மகப் பேறு கிடைக்கும் என்ற நம்பிக்கையில் மாவிளக்குப் பூசை நடைபெற்று வருகிறது.

இந்தப் பகுதியைச் சார்ந்த பூந்துறை, வெள்ளோடு, நசியனூர், எழுமாத்தூர் ஆகிய இடங்களில் வசிக்கும் மக்கள் திருமணம் புரிந்தவுடன் முதலில் இங்குவந்து சென்னிமலை யாண்டவனுக்கு வழிபாடு செய்கிறார்கள் அதன் பின்னர் தான் ஏனைய காரியங்களைச் செய்வது என்ற வழக்கத்தை மேற்கொண்டுள்ளார்கள். இந்தப் பகுதியைச் சார்ந்த மக்கள் வெளியூரில் குடியிருந்தாலும், இதைக் கடைப் பிடித்து வரு கிறார்கள்.

15. பிற:

சென்னையைச் சார்ந்தோர் அடிக்கடி பழனி வருவது என்பது இயலாத காரியம். அதே சமயத்தில் பழனி முருகனை வணங்க வேண்டும் என்ற ஆர்வம் அதிகம். எனவே சென்னையில் வடபழனி யாண்டவர் என்று தாபித்து பூசித்து வருகிறார்கள். அதே போன்று சென்னிமலை ஆண்டவனிடம் ஈடுபாடு கொண்ட சேலம் மாவட்டம் ஆத்தூர் பகுதி வாழ் மக்கள் தங்கள் பகுதியில் வட சென்னி மலை என்ற திருக்கோயிலை எழுப்பியுள்ளார்கள். அவினாசி யினின்றும் கோவைவரும் வழியில் சென்னிமலை ஆண்டவ

னின் திருக்கை வேலைவைத்துப் பூசித்த இடத்தில் சென்னி யாண்டவர் கோயில் என்று ஒரு திருக்கோயில் கட்டப்பட்டு, மக்களால் வணங்கப்பட்டு வருகிறது. இவையாவும் கொங்கு நாட்டு மக்கள் சென்னிமலை இறைவனிடம் கொண்ட ஈடுபாட்டைத்தான் காட்டுகிறது.

1984ஆம் ஆண்டு தொடக்கத்தில் இரட்டை மாட்டு வண்டி மலைப்படிகளில் ஏறி இறைவனது திருக்கோயிலை அடைந்தது பெருமை மிக்க நிகழ்ச்சியாகும்.

## 16. நிர்வாகம்:

இந்து சமய அறநிலைய ஆட்சித்துறையைச் சார்ந்த அலுவலர், செயல் அலுவலராக, திருக்கோயிலை நிர்வகித்து வருகிறார்.



# பிற்சேர்க்கை—1

## திருப்புகழ்

அழுதழுது ஆசார நேசமு முடையவர் போலே பொய்
சூழ்வுறும்
அசடிகள் மாலான காமுகர் பொன் கொடாநாள்
அவருடன் வாய் பேசி டாமையு முனிதலு மாறாத
தோஷிகள்
அறுதியில் காசாசை வேசைகள்
நிஞ்சுதோயும்
விழிகளினால் மாடவீதியில் முலைகளை யோரமல்
ஆரொடும்
விலையிடு மாமாய ரூபிகள் பண்பிலாத
விரகிகள் வேதாளமோவென முறையிடு
கோமாள மூனிகள்
வினை செயலாலே என் ஆவியும்
அங்கலாமோ
வழியினில் வாழ் ஞான போதக பரமசுவாமீ
வரோதய
வயலில் வேலாயுத வரை எங்குமானாய்
மதுரையின் மீது ஆலவாயினில் எதிர் அமன்
ஓர்ணொயிரர்
மறிகழு மீதேற நீறு பரந்து உலாவச்
செழியறும் ஆளாக வாது செய் கவிமத சீகாழி
மாமுனி
சிவ சிவ மாதேய காவென
வந்துபாடும்
திருவுடையாய் தீதிலாதவர் உமை யொரு பாலான
மேனியர்
சிரகிரி வாழ்வான தேவர்கள்
பெருமாளே.

2. பகலவன் ஒகடிங் கனவி நத்நம்
பவள வெண் முத்தக திரமாகப்
பயில முலைக் குன்றுடையவர் சுற்றம்
பரிவென வைக்கும் பண வாசை
அகமகிழ் துட்டன் பகிடி மகுட் கொண்டு
அழியும் அவத்தன் குணவீனன்
அறிவிலி சற்றும் பொறையிலி பெற்று உண்டு
அலைதல் ஒழித்து என்று
அருள்வாயே
சகலரு மெச்சும் பரிமள பத்மக்
தருண பதத்தின் சுரலோகத்
தலைவர் மகட்கும் குறவர் மகட்கும்
தழுவ அணைக்கும் திருமார்பா
செகதல மெச்சும் புகழ் வயலிக்குந்
திரு திரு எனப் பொங் கிய ஓசை
திமிலை தவிற்றும் தும்மிகள் முழக்கும்
சிரகிரியிற்கும் பெருமானே.

3. பகலிரவினிற் றடுமாறா
பதிகுருவெனத் தெளிபோத
ரகசிய முறைத்து அநுபூதி
ரத நிலைதனைத் தருவாயே
இகபரம் அதற்கு இறையோனே
இயலிசையின்முத் தமிழோனே
சகசிரகிரிப் பதிவேளே
சரவணபவப் பெருமாளே

4. [இந்தப் பாடல் சென்னிமலை பற்றிய நூலினின்றும்
எடுக்கப்பெற்றது ]

புகழ் பரவு செஞ்சொல் வேதம்
முதல் மொழி புகன்ற போது
புகல் எனவும் அஞ்சு வேதன் அறியாதே

பொறி சிறை அடங்கு வாய்மை
அமரர் சிவன் முன்பு கூறும்
பொழுதினில் அறிந்தவாறு மதலாய்நீ

மகிழ்வுடன் விளம்ப வேணும் என இனிது
உகந்து கூற வகையினி
விதங்கள் ஓது குருநாதா

வனித குற தெய்வ மங்கை
நிறை அருள் செய்தெய்வயானை
மருவு புய கந்தசாமி யெனும்வேனா

இகல் அரவினின் பதாகை
புனைபவன் மறம் செயபோதில்
துனியுற எழுந்து உலாவு முனையோன்

மிதம் உலாவு ஐந்து பேர்கள்
தனது புரி சங்க பாணி
இலகுதிரு மங்கை மார்பன் மருகோனே

திகழ் பரவு கஞ்ச ஓடை
மதன் சிகரம் உம்பர் மேடை
செறியும் எழில் கொண்ட காளி நகராள்வோன்

திரு முக மலர்ந்த நாதர்
அருள் புரி குழந்தை வேலர்
சிரகிரி அமர்ந்து வாழும் முருகோனே.

---

# பிற்சேர்க்கை—2

## சரவண பஞ்சகம்

[சென்னிமலைத் தல புராணம்-5 காட்சி
மான்யம்-13 முதல் 17
வரையிலான பாடல்கள்]

1. மூவிரு மூவா முதலே! சரணம்
முகில் வண்ணன் மருகா! முருகா! சரணம்
கூவிய காலாயுதனே! சரணம்
குலவுகை வேலாயுதனே! சரணம்
மாவிரு கூறாய் வகிர்வாய்! சரணம்
மலைமுனி குருவாய் வருவாய்! சரணம்
தேவர்கள் சேனாபதியே! சரணம்
சிகராசலனே! சரணம் சரணம்

2. முத்தா! முத்தித் துணைவா! சரணம்
முதிரா முலையுண் முருகா! சரணம்
அத்தா! வத்திக் இறைவா! சரணம்
அமராபதி காவலனே! சரணம்
சுத்தா! சுத்தத் துறையாய்! சரணம்
தோகாதிப! வேதியனே! சரணம்
சித்தா! சித்திப் பொருளே! சரணம்
சிகராசலனே! சரணம் சரணம்

3. உருவாய் யருவாய் வருவாய்! சரணம்
ஒருவா ஒருவாய் வருவாய் ! சரணம்
தருவாய் புரியே தருவாய் ! சரணம்
தருணா கருணா கரனே ! சரணம்
மருமாலிகை சேர் மருமா ! சரணம்
மயிலாய் ! அயிலாய் ! வருவாய் சரணம்

திருமால் மருகா ! முருகா ! சரணம்
சிகராசலனே ! சரணம் சரணம்

4. மகநான் மறைகால் வெளியே! சரணம்
மறை யாகம நூலிறை வா ! சரணம்
துகிர் வார் சடையார் சுதனே ! சரணம்
சுடர் வேல் வரையூடு எறிவாய் ! சரணம்
முகிலார் குழன் மாமகுண! சரணம்
முருகார் முது நூன் முறையே! சரணம்
சிகி வாகனே! சரணஞ் சரணம்
சிகராசலனே! சரணம் சரணம்

5. கந்தா! வுயர் சம்பந்தா! சரணம்
கலையாய்! சிவமாமலையாய்! சரணம்
மாந்தாகினி தன் மைந்தா! சரணம்
மஞ்சார் குழலான் மைந்தா! சரணம்
நந்தா தெழு மானந்தா! சரணம்
நாமா துறை பன்னாமா! சரணம்
சிந்தாமணியாய் வந்தாய்! சரணம்
சிகராசலனே! சரணம் சரணம்.



